*Nam nāṭu*

*Malar 2, itaḻ 161*

*December 18, 1954*

Record no. 1131

REGD. No. M. 6311 ✶ தனி இதழ் 1 அணு ★ இலங்கையில் 10 சதம் ★ PHONE: 55630

# நம் நாடு

தி.மு.க. தின இதழ் — ஆசிரியர்: அண்ணாதுரை

The "Nam Nadu" A Tamil Daily. ✶ The Official Organ Of The D.P.F.

மலர் 2] சென்னை: மார்கழி 3உ சனி (18—12—54) ★ ★ வெளியூர்: மார்கழி 4உ ஞாயிறு (19—12—54) [இதழ் 161

## டில்லி அமைச்சர்கள் தவிப்பு!

புதுடில்லி, டிச. 17—

இன்று மக்கள் சபையில் கேள்வி நேரத்ின்போது கேள்விகளுக்குப் பதில் அளிக்கும்பொழுதும், உப கேள்விகளுக்குப் பதில் அளிக்கும்பொழுதும் அமைச்சர்கள் பலர் இந்தியில் பதில் அளிக்க முடியாது தவித்தனராம்.

உதவிப் பாதுகாப்பு அமைச்சர் சர்தார் சுர்ஜித் சிங், இந்தியில் பதில் அளிக்க முயன்றார்; ஆனால் அது பலன் அளிக்கவில்லை.

உள்நாட்டிலாகா உதவி அமைச்சர், பி. என். தாதர் இந்தி மொழி அறியாதவராதலால், ஆங்கிலத்தில் அளிக்கப்படும் பதில்களை இந்தியில் மொழிபெயர்க்க தன்னுடைய நண்பர் மாளவியாவின் உதவியை நாடினர்.

# தனி நபரின் உரிமைக்காப்பே அரசாங்கத்தின் முதற் கடமை

## அரசியல் சட்டத்தில் வழங்கப்பட்டிருப்பதோ அடிப்படை உரிமை!

## அரசியல் நடைமுறையோ அதை விட்டு விலகிச் செல்கிறது

### குடிமகனுக்கும் அரசாங்கத்திற்கும் உள்ள உறவு பற்றி சர்தார் பணிக்கர்

கட்டாக், டிச. 15—

சமீப காலத்தில் உலகத்தின் போக்கு தனிப்பட்ட மனிதனின் உரிமைகளைப் பறித்து, அதிகாரத்திலிருப்போருக்குப் பாதுகாப்புத் தரும் வகையில், அரசாங்கங்களிடம் அளவுக்கு மீறிய அதிகாரங்களைக் குவிப்பதாயிருக்கிறது; இந்த ஆபத்தான போக்கு இந்தியாவையும் பிடித்திருக்கிறது."

—என்று, உத்கல் பல்கலைக் கழகத்தின் பட்டமளிப்பு விழாவில் பேசிய சர்தார் கே. எம். பணிக்கர் குறிப்பிட்டிருக்கிறார்.

மேலும் அவர் கூறினர்:—

"தனிப்பட்ட மனிதர்களைப் பற்றிப் பேசுவது, காலங்கடந்த ஒன்றுகக்கூட இருக்கலாம்; ஆனுல், நான் வலியுறுத்திச் சொல்ல ஆசைப்படுகிறேன்—"நாம் என்னதான் ஒரு அரசாங்கத்தைப் போற்றிப் பாராட்டுவதானுலும், அதன் பண்புகளைப் போற்றுவதானுலும், அதன் புகழ் பாடுவதானுலும், ஒரு அரசாங்கம் தனி மனிதனுக்குச் செய்யும் சேவையைப் பொறுத்துத்தான், அந்த அரசாங்கம் அமைவதில் நியாயமிருக்க முடியும்."

"தனி மனிதர்களைக்கொண்டே ஒரு சமுதாயம் தனது கட்டுக்கோப்பை உயர்த்திக்கொள்கிறது. அந்தச் சமுதாயமே தனி மனிதர்கள் பலரால் ஆனதுதான். அந்தச் சமுதாயத்தின் 'முழுமைக் கண்ணேட்டம்' தனி மனிதர்களின் அடிப்படை சுதந்திரமான சிந்தனையின் முடிவுகளை ஏற்றுக் கொள்ள மறுக்கிறது. இந்த நிலை, உரிமையின் பரம வைரி என நான் கருதுகிறேன்."

மேலும், தனி மனிதரின் உரிமைகள் பறிக்கப்படுவது பற்றிப் பேசுகையில், அவர் குறிப்பிட்டதாவது:—

"தனி மனிதனை விசாரணையின்றியே காவலில் வைக்கும் அதிகாரத்தை அரசாங்கங்கள் பெறத் திட்டமிடப்படுவதை நாம் அறிவோம். இது, குற்றம் சுமத்தப்படுவோரின் உரிமைகளைக் கட்டுப்படுத்துகிறவகையில் சட்டமுறையையே புதுப்பிக்கிறதாகவே கருதப்பட வேண்டும்."

"இவையெல்லாம் தனி மனிதரின் உரிமைகளைக் கட்டுப்படுத்தி அரசாங்கத்தின் அதிகாரங்களை உயர்த்துவதாகும். இதைக் குறித்து நம்மில் ஒவ்வொருவரும் வெகு ஜாக்கிரதையாக கவனிக்க வேண்டும்."

"சுதந்திரம் என்பது, வெகு மகத்தானது; பொருளாதார வளம் என்பது மிக விரும்பத் தக்க ஒன்றுகும்; ஆனுல், இவை இரண்டும் (சுதந்திரமும், பொருளாதார வளமும்) தனி மனிதனின் சுதந்திரத்துடன் ஒன்றினுலொழிய, வாழ்க்கை என்பது, சுதந்திரமான பொருளாதார வளம்மிக்க ஒரு சமுதாயத்தில்கூட, கிஞ்சிற்றுத்தான் பயனுள்ளதாகும்."

"இந்திய அரசியல் சட்டத்தில் வழங்கப்பட்டுள்ள அடிப்படை உரிமைகள் தாராளமானவைதான். ஆனுல், இன்றுள்ள அரசியல் நடைமுறையின் போக்கு அதனின்றும் மறுக்க முடியாதவாறு விலகிச் செல்வதாகவே உள்ளது."

## பாரிஸ் ஒப்பந்தங்கள்-பிரான்சில் எதிர்ப்பு?

பாரிஸ்—லண்டன் ஒப்பந்தங்களை அங்கீகரிப்பதை ஆதரித்துச் சமர்ப்பிக்கப்பட்ட ஒரு ரிப்போர்ட், பிரெஞ்சு தேசீய சபையின் தற்காப்பு குழுவினுல் நிராகரிக்கப்பட்டுவிட்டதென்றும், வாக்கெடுப்புக்கு விடப்பட்டதில், ஆதரவாக 11-ம், எதிராக 21 வாக்குகளும் கிடைத்தன என்றும் கூறப்படுகிறது.

## துருவ மண்டலத்தில் விமானப் படைகள்

### ரஷ்யாவின் சக்திமிக்க 'குண்டு வீசி'கள்!

அமெரிக்க கேந்திர விமான தலைமைத் தளங்களையெல்லாம் சின்னபின்னப்படுத்தும் சக்திமிக்க 'நெடுந் தொலைவு குண்டுவீசி'களை முதன் முதலாக இப்போது சோவியத் சர்க்காரிடம் இருப்பதாக, நியூயார்க் 'டைம்ஸ்' இதழ் தெரிவித்துள்ளது.

மேலும் அவ்விதழ் தெரிவித்திருப்பதாவது:—

"சோவியத் துருவ மண்டலத்தில் 1200-க்குக் குறைவு படாத 'டுபோர்' குண்டு வீசிகளை சோவியத் விமானப்படை நிறுத்திவைத்திருக்கிறது; தகுந்த உபகரணங்களைக் கொண்ட சிறந்த பயிற்சி பெற்ற விமானிகளுக்கு 'எலெக்ட்ரானிக்' திருஷ்டி சாதனம் வழங்கப்பட்டிருப்பதுடன், ஒரு மணி நேரத்தில் 600 மைல் செல்லக் கூடிய இரண்டு வகை 'ஜெட்' விமானங்கள், அநேகமாக நீர் வளிக் குண்டுகளுடன் நிறுத்தப்பட்டுள்ளன."

## பொறுப்பாட்சி கோரிக்கையினர் மீது துப்பாக்கிப் பிரயோகம்

### மக்கள் கல் வீச்சில் இன்ஸ்பெக்டர்-ஜெனரல் உட்பட பலருக்குக் காயம்

இம்பால், டிச. 17—

மணிப்பூர் மாநிலத்தில், சட்டசபை கலைக்கப்பட்டு, ஆலோசனை கவுன்சிலின் ஆட்சி நடப்பதை எதிர்த்து ஏராளமான பேர்கள் 'அறப்போரி'ல் ஈடுபட்டுள்ளனர்.

நேற்று மாநில போலீஸ் இன்ஸ்பெக்டர்-ஜெனரல் உட்பட ஏராளமான போலீசார் மீது, ஆர்ப்பாட்டத்தில் ஈடுபட்டிருந்தவர்களின் அனுதாபிகள் எனக் கூறபடுவோர் கல்லெறித் தாக்குதல் துவக்கியதின் விளைவாக பலர் காயமடைந்திருக்கின்றனர்.

5000 பேருக்கும் அதிகமாயிருந்த அந்தக் கூட்டத்தின் கல்லெறித் தாக்குதலைச் சமாளிக்க போலீசார் துப்பாக்கிப் பிரயோகம் செய்திருக்கின்றனர்; துப்பாக்கிப் பிரயோகத்தினுல் ஏராளமான ஆர்ப்பாட்டக்காரர்களுக்கு படுகாயம் ஏற்பட்டுள்ளதாம்.

சர்க்கார் அலுவலகங்கள், நீதிமன்றங்கள் இவற்றிற்குச் செல்லும் வழி நெடுக ஆர்ப்பாட்டக்காரர்கள் மறியல் செய்திருக்கின்றனர். "கலைக்கப்பட்ட சட்டசபையை மீண்டும் கூட்டுக; ஆலோசனைக் கவுன்சில் ஆட்சி ஒழிக," என்ற ஒலி முழக்கம் எழுப்பியவண்ணம் கண்டன ஊர்வலங்களும், கூட்டங்களும் நடைபெற்றிருக்கின்றன.

நகரில் இன்று முதல் 144 தடையுத்தரவு பிறப்பிக்கப்பட்டுள்ளது எனத் தெரிகிறது.

நேற்றும் ஆர்ப்பாட்டக்காரர்கள் கல்லெறிதல் போன்ற பலாத்காரச் செயல்களில் ஈடுபட்டதாகக் கூறப்படுகிறது.

இதைத் தொடர்ந்து போலீசாருக்கும், ஆர்ப்பாட்டக்காரர்களுக்குமிடையே கைகலப்பு தோன்றியதின் விளைவாக போலீசார் கூட்டத்தினரைக் கலைக்க ஒரு 'டஜன்' கண்ணீர்ப்புகைக் குண்டுகளை வெடித்திருக்கின்றனர்.

போலீசாரில் பலருக்கு கல்லெறி காயமும், ஆர்ப்பாட்டக்காரர்களில் பலருக்கு கண்ணீர்புகைக் குண்டு வீச்சும் கிடைத்திருக்கின்றன.

போலீசாரின் நடவடிக்கையை எதிர்த்து கண்டனக் கூட்டம் ஒன்றும் நடத்தப்பட்டிருக்கிறது எனச் செய்திகள் கூறுகின்றன.

## சிறைச்சாலையில் ஆயிரம் போலீசார்!

### சிறைக்காவலரும் உண்ணுமையை மேற்கொண்டனர்

மேற்கு வங்க மாநில போலீசாரின் உண்ணுவிரதப் போராட்டம் தொடர்ந்து ஏழாவது நாளாக நடைபெற்று வந்துள்ளது, இதற்கிடையில்போலீசாரைப்போலவே ஆயிரத்திற்கும் அதிகமான சிறையில் வார்டர்களும் உண்ணுவிரதத்தை மேற்கொண்டிருப்பதாகச் செய்திகள் வந்தவண்ணமுள்ளன. அவர்களும், போலீசாரைப் போலவே தங்களுக்கும் அதிகச் சம்பளம், பஞ்சப்படி போன்றவையும் தரவேண்டுமெனக் கோரி உண்ணுவிரதத்தை மேற்கொண்டிருக்கின்றனர் எனத் தெரிகிறது.

முதலில் மாநில சிறை, மத்திய சிறை இவை இரண்டிலும் பணி புரியும் வார்டர்கள் நேற்றிரவு உண்ணுவிரதம் மேற்கொண்டிருக்கின்றனர். தொடர்ந்து டம்டம், மிதுனபுரி ஆகிய மாவட்ட சிறைக்கும் போராட்டம் பரவி இருக்கிறது எனத் தெரிகிறது.

உண்ணுவிரதமிருப்பதற்காகக் கைது செய்யப்பட்டு சிறை வைக்கப்பட்டுள்ள போலீசாருடன், உண்ணுவிரதமிருக்கும் ஜெயில் வார்டர்களும் கலந்துவிடாது தடுக்க முன்னெச்சரிக்கையான நடவடிக்கைகளை சிறை இலாக்காவினர் மேற்கொண்டிருக்கிறார்களாம்.

ஆயிரத்திற்கும் அதிகமான உண்ணுவிரதமிருக்கும் போலீசார் கைது செய்யப்பட்டுள்ளனர்.

இதற்கிடையில் மேற்கு வங்க முதன் மந்திரி டாக்டர் பி. சி. ராய் போலீஸ், சிறை அதிகாரிகளடங்கிய அவசரக் கூட்டமொன்றைக் கூட்டி ஆலோசனை நடத்தியதாகவும் செய்திகள் கூறுகின்றனர்.

உண்ணுவிரதத்தை கைவிடக் கோரி போலீசாருக்கு இரண்டு மணி நேர நோட்டீஸ் கொடுக்கவேண்டுமெனவும், அவர்கள், உடனே விரதத்தை முடித்துவிட்டு வேலைக்குத் திரும்பாவிடில் அவர்கள் வேலையிலிருந்தே நீக்கப்படுவார்கள் என்றும் கடுமையாக எச்சரித்திருக்கிறதாகத் தெரிகிறது.

இதுபற்றி சர்க்கார் வெளியிட்டுள்ள அறிக்கையொன்றில் போலீசாரில் சிலர் கம்யூனிஸ்டுகளுடன் தொடர்பு வைத்திருப்பதாயும், கம்யூனிஸ்டுகளின் பின்னணியுடன்தான் இந்த உண்ணுவிரதப் போராட்டம் நடத்தப்படுவதாயும் கூறப்பட்டிருப்பதுடன், ஒரு கட்டுப்பாடு மிகுந்ததும், மக்களுக்குப் பாதுகாப்புடன் கூடிய சேவையில் ஈடுபட்டிருப்பதுமான போலீசார் இவ்வித சட்ட விரோதமான நடவடிக்கைகளில் ஈடுபடுவது மிக ஒழுங்கீனமானது என்றும்,

எனவே, அவர்கள் உடனடியாக வேலைக்குத் திரும்பாவிட்டால், அவர்கள் வேலையைவிட்டு விலகிக் கொள்ளத் தீர்மானித்துவிட்டதாகப் பொருள்படும் என்றும் கண்டிப்பான எச்சரிக்கை விடுத்துள்ளது.

அரசாங்கத்தின் எச்சரிக்கைக்குப் பெரும்பாலான போலீசார்செவி சாய்க்கவில்லை. சுமார் 70 பேர்கள் மட்டுமே வேலைக்குத் திரும்பினராம்.

மேற்கு வங்கத்தில் கொந்தளிப்பான நிலை நிலவுகிறதாம்.

## பரிசீலனையிலிருக்கிறதாம்

திருச்சி மாவட்டத்திலுள்ள பெரம்பலூருக்கு மின்சார வசதியை விரிவுபடுத்தவேண்டுமென்று கோரிக்கைகள் வந்துள்ளதாகவும் அத்திட்டம் பரிசிலனையிலிருக்கிறதென்றும் சென்னை சர்க்கார் மராமத்து மந்திரி, கேள்வி ஒன்றுக்குப் பதிலாகக் கூறியிருக்கிறார்.

நம் நாடு
தி.மு.க. தினஇதழ் ஆசிரியர்: அண்ணாதுரை

சென்னை 18—12—1954 சனி

# இரவல் பட்டு!

ஒருத்திக்குப் பட்டு சேலை கட்டிக்கொள்ள வேண்டுமென்பது நெடு நாளைய ஆசை. சொந்தத்தில் ஒரு சேலையை வாங்கி உடுத்திக்கொள்ள, அவள் பண பலம் இடம் தரவில்லை. எனவே கட்டாயத்தின் காரணமாக, எதிர் வீட்டுக்காரியிடம் ஒரு பட்டுச் சேலையை இரவலாகப் பெற்று உடுத்திக்கொண்டு ஒரு திருமணத்திற்குச் சென்றாள். சேலையை இரவல் கொடுத்த எதிர் வீட்டுக்காரியும், அவளுடன், அதே திருமணத்திற்குச் சென்றாள்.

ஒரு திருமண வீட்டில் ஜன நடமாட்டம் அதிகமாக இருப்பது இயற்கை. அதற்கொப்ப தரையும் தூசு படிந்துதான் இருக்கும். இரவல் பட்டுச் சேலை அணிந்துகொண்டிருந்தவள், தனது இயல்புப்படி தூசு படிந்த தரையில் வெகு தாராளமாக உட்கார்ந்து கொண்டாள். அப்படி உட்காருவதால், இரவல் வாங்கிய பட்டுச் சேலை அழுக்காகிவிடுமே என்பதை அவள் துளியும் நினைக்கவில்லை.

எப்பொழுதோ ஒருமுறை சந்திக்கின்ற உறவின்முறையார் ஒன்றுகூடுவதற்கு திருமண வீட்டில் வாய்ப்புண்டு. அப்படி ஒன்றுகூடுகின்ற பலரும், கிடைத்த வாய்ப்பை நழுவ விடாமல், தங்கள் தங்களுக்கு விருப்பமானவர்களிடம் தனித்துக் கூடி உரையாடவும் செய்வர். இரவல் பட்டு சேலைக்காரி, ஒரு இடத்திலும் அதிக நேரம் உட்காராமல், வெவ்வேறு இடங்களில் உட்கார்ந்திருந்த தன் சுற்றத்தாரிடம் பேசக் குந்திக்குந்தி எழுந்தாள். இப்படி ஒவ்வொரு முறையும் அவள் குந்தி எழும்பொழுதெல்லாம், சேலை இரவல் கொடுத்தவளுக்குக் கோபமும், சேலை அழுக்காகிவிடுகிறதே என்ற துக்கமும் தோன்றித் தோன்றி மறையலாயின. மேலும் அழுக்காவதிலிருந்து இரவல் பட்டைத் தடுக்க ஒரு யுக்தி [illegible]தாள், இரவல் கொ[illegible]த்த பட்டு சேலைக்குரி[illegible]வள்.

அங்கு கிடைத்த ஒரு மணையைத் தூக்கிக்கொண்டு, இரவல் பட்டு சேலைக்காரி உட்காரும் இடங்களுக்கெல்லாம் அவளைப் பின்தொடர்ந்துசென்று, அவளை மணையில் உட்காரும்படி கெஞ்சியும்—சினந்தும் கேட்டுக்கொண்டாள். இப்படி ஒரு பாட்டிக் கதையை ஏற்கனவே நம்மில் பலர் கேட்டிருக்கலாம்.

கதை, கிழவிகளின் உலகத்துக் கதையாக இருந்தபோதிலும், தற்கால காங்கிரஸ் அரசியல் உலகத்திற்கு, இக்கதையின் கருத்து மிகமிகப் பொருத்தமானதாகவும் இருக்கிறது. அது எவ்வாறு எனப் பார்ப்போம்.

இந்தியாவை, மற்ற நாடுகளைப்போல், ஒரு நாடு எனக் கூறுவதற்கில்லை. ஒரு நாட்டுக்கு இலட்சணங்களாக இருந்தாக வேண்டிய இனம், மொழி, நாகரிகம், கலாச்சாரப் பண்பாடு, பழக்க வழக்கம், பூர்வப் பெருமை, மக்களின் தோற்றம் ஆகிய அனைத்திலும், இந்தியா வேறுபட்டும், முரண்பட்டுமே காணப்படுகிறது. எனவே, இந்தியாவை ஒரு நாடு எனக் கூறுவதைக் காட்டிலும், ஒரு துணைக் கண்டம் எனக் கொள்வதே பொருத்தமுடையதாக இருக்கிறது. இந்த உண்மையைத்தான் முன்னாள் வரலாறும், நிகழ்கால வரலாறும் மெய்ப்பித்துக்கொண்டு இருக்கின்றன.

பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம், இந்தியத் துணைக் கண்டத்தில் காலடி எடுத்து வைப்பதற்கு முன்னதாக, ஒரே ஆட்சி இந்தியா முழுவதும் பரவி இருந்ததாக வரலாறும் இல்லை.

மற்ற வரலாற்று உண்மைகளை, தங்கள் நோக்கப்படி எழுதிக்கொண்ட கற்பனைச் சம்பவங்கள், நாட்டில் உட்பகையை வளர்க்க வேண்டுமென்றே வரையப்பட்ட பொய்ச் செய்திகள் என்றெல்லாம், அவ்வுண்மைகளை அடியோடு மறைக்க முடியாத காரணத்தால், அவைகளை நூல் வடிவில் உருவாக்கி வைத்த வெள்ளை கிறித்துவ ஆசிரியர்களைக் குறை கூறும் கெடுமதியினர் கூட, ஆங்கில ஏகாதிபத்திய காலம்வரை இந்தியத் துணைக் கண்டத்தின் பல பகுதிகளில், பலப் பலர் ஆட்சி இருந்து வந்தது என்பதை மறுக்க துணிவு கொள்ளார். அப்படி மறுக்க முன்வருவதானால், ஏற்கனவே பல சுதேச சமஸ்தானங்கள் இருந்து வந்ததற்கும், அந்த சமஸ்தானாதிபதிகளில் கிலர் ராஜப் பிரமுகர்களாகக் காட்சி அளித்து வருவதற்கும், அவர்கள் தக்க விளக்கம் கூறியாக வேண்டும். உண்மையை மறுப்பரோ—விளக்கம் கூறுவரோ—ஒருக்கா[illegible] குணவான்[illegible] முடியாது. [illegible]

இந்தியாவில் உள்ள எந்த ஒரு பகுதி மக்களிடமும், 'இந்தியா,' 'இந்தியன்' என்ற தேசிய உணர்வு அறவே கிடையாது; ஏற்கனவே இருப்பதற்கு வரலாற்றில் இடமுமில்லை. இந்த உணர்விற்கு வித்திடப்பட்டதே ஆங்கிலேயன் காலத்தில்தான். மக்களின் சம்மதத்தைப் பெற்றும் இது விதைக்கப்படவில்லை. தனது நிர்வாக வசதிக்காக ஆங்கிலேயன், அவ்விதையை இம்மண்ணில் தூவினான். அவன் ஆட்சி இருந்த இருநூறு ஆண்டு காலத்திலும், அவ்வித்து முளைத்துச் செடியாகவில்லை. அவன் வெளியேறிவிட்ட இக்காலத்திலும், அவ்வித்திலிருந்து முளை கூடக் கிளம்பவில்லை.

ஆங்கிலேயன் தூவிய தேசிய உணர்வு விதைக்கு, அவனை எதிர்த்து உரிமை முழக்கமிட்டவர்கள், நீர் பாய்ச்சத் தொடங்கினர். அத்தேசிய உணர்வு விதை முளைவிட்டு, செடியாகி, பெருமரமாகி, அரும்பி, அருங்கனி தரவேண்டும் என்ற நோக்கத்துடன் தான், அவ்வித்துக்கு, உரிமை வேட்கையினர் நீர்ப்பாய்ச்சினர் என்றும்சொல்வதற்கில்லை. தேசீய உணர்வை வளர்க்க அறிந்தோ அறியாமலோ முயன்ற உரிமை வேட்கையினர், அதே காலத்தில், மொழியை அடிப்படையாகக் கொண்ட பலப் பல 'தேசிய உணர்வு' விதைகளை, இப்பாரத் பூமியில் தூவியும் விட்டனர். இதன் பலனாக, ஒரே ஒரு தேசிய உணர்வு உருவாவதற்குப் பதிலாக, பலப் பல தேசிய உணர்வு உருவாகி உரம் பெற்றும்விட்டது. உருவாகி உரம் பெற்றுள்ள ஒவ்வொரு தேசீய உணர்வும், ஒன்றை ஒன்று தாக்கிக் கொள்ளுகின்றன—பகைத்துக் கொள்ளுகின்றன. இப்பகையும்—தாக்குதலும், திரை மறைவில் நடைபெறவில்லை. பகிரங்கப் போர்க்களச் சம்பவங்களாகக் காட்சி அளிக்கின்றன. குருடனும் கேட்கலாம், செவிடனும் பார்க்கலாம் அச்சம்பவங்களை. முன்னாள் வரலாறு திரும்புகிறது என்பதுதான் இதற்குப் பொருத்தமான விளக்கமாகும்.

இந்திய தேசீய உணர்வு இலவம்பஞ்சுக்குச் சமம். மற்ற தேசீய உணர்வோ வேர்விட்டு ஓங்கி வளர்ந்து, எதிர்ப்பான நேரங்களில் எல்லாம், திடீர் திடீரென, பயங்கர சப்தமிட்டு வாய் திறந்து, தீக்குழம்பைக் கக்கும் எரிமலைகளுக்குச் சமம்.

எரிமலைகளை எதிர்க்க இலவம் பஞ்சுக்கு ஆற்றலும் கிடையாது; எதிர்க்க நெருங்கினால் பஸ்பமாகிவிடுவதும் நிச்சயம்.

இந்திய தேசீய உணர்வு எந்த அளவுக்கு முரண்பாடு—பகை கொண்டதாக உள்ளதோ, அதே அளவிற்குத்தான், இத்துணைக் கண்டத்தில் உருவாகி இருக்கும் பலப்பல தேசீய உணர்வுகளும், இந்திய தேசீய உணர்வின்பால் முரண்பாடும்—பகையும் கொண்டிருக்கின்றன. இதில் தர வேற்றுமை கிடையாது. நிற்க,

இந்திய தேசீய உணர்வு இங்கு கால்கொள்ளவும் இல்லை, வளர்ந்தோங்கவுமில்லை என்பதற்கு மற்றொரு எடுத்துக்காட்டும் இருக்கிறது. காங்கிரசின் ஐம்பதாண்டு இடைவிடா முயற்சிக்குப் பின்னரும், பாகிஸ்தான் பிறந்திருப்பது ஒன்றே சிறந்த எடுத்துக்காட்டாகும்.

இந்தியத் துணைக் கண்டத்து மக்களுக்கு 'இந்திய தேசிய உணர்வு,' திருமண வீட்டிற்குக் கட்டிச் செல்வதற்காக எதிர் வீட்டுக்காரியிடம் இரவல் வாங்கிய பட்டுச் சேலையே யாகும். கல்யாண வீட்டில் கண்ட கண்ட இடத்தில் உட்கார்ந்தால்,பட்டுச் சேலை அழுக்காகிவிடுமே என்ற கருத்து, இரவல் பட்டுச் சேலைக்காரிக்கு இல்லாமல் போய்விட்டது. கட்டி இருக்கும் பட்டுச் சேலை இரவல் சேலைதானே என அவளுக்கிருந்த நினைப்பு, அழுக்காகிவிடுவதிலிருந்து அதைக் காப்பாற்ற வேண்டுமே என்ற கருத்தை, அவளிடம் உண்டாக்கத் தவறிவிட்டது. ஆனால், அவளுக்கு அப்பட்டுச் சேலையை இரவல் கொடுத்த சேலை சொந்தக்காரிக்கோ, அதைப் பார்த்து சகித்துக் கொள்ளமுடியவில்லை. எனவே, அழுக்காகாமல் சேலையைக் காப்பாற்ற அவள் அக்கரை காட்டினாள். அதற்காக, இரவல் சேலைக்காரி உட்காரும் இடங்களுக்கெல்லாம், ஒரு மணையைத் தூக்கிக்கொண்டு பின் தொடர்ந்தாள்.

இரவல் பட்டு வாங்கினவளுக்கு, அச்சேலையில் பாத்தியதை இருக்குமானால், அவள் அதைஅழுக்குப்படாமல் பாதுகாக்க முனைவாள் என்பதில் ஐயமில்லை. இரவல் பட்டாக இருக்கவே, அது எக்கேடு கெட்டால் என்ன என அவள் நடக்கத் துணிந்துவிட்டாள்.

அவளைப் போலவே, அப்பட்டுச் சேலையை இரவல் கொடுத்தவளுக்கு இருந்[illegible] வில்லை. அச்சேலையின் பாத்தியதை அவளுக்கே இருந்த காரணத்தால், அழுக்குப் படாமல் அதைக் காப்பாற்றுவதில் அக்கரை காட்டினாள்.

இந்தியத் துணைக் கண்டத்திற்கு, 'தேசிய உணர்வு' மேல் நாட்டுத் தொடர்பினால் ஏற்பட்ட வெறும் நினைப்பேயாகும். எனவே, அது இந்தியத் துணைக் கண்டத்திற்குக் கிடைத்த இரவல் பட்டுச் சேலையை ஒப்பும். அப்பட்டுச் சேலையால் சொந்தத்தில் உலகப் புகழும் பெரும் தேட நினைக்கிறவர்களும், அவ்வாறு கிடைக்கும் போலிப் புகழில் தங்கள் உயர்வைப் பிணைத்துக்கொண்டிருப்பவர்களும் 'தேசிய உணர்வு' எனும் இரவல் பட்டுச் சேலையைப் பாதுகாக்க வேண்டுமென, பெரும் முயற்சி செய்கிறார்கள். அதற்குப் பழுது ஏற்படாமல் காக்க, போதனை எனும் மணையைத் தூக்கித் திரிகிறார்கள். அதாவது, ஒரே இந்திய தேசிய உணர்வின் உயர்வை வலியுறுத்த, தாங்கள் பிற நாட்டு வரலாற்று ஏடுகளில் கண்ட அருமை பெருமைகள் அனைத்தையும், அப்படியே கால் புள்ளி அரை புள்ளி விடாமல். கக்கித் திரிகிறார்கள்.

மற்ற நாடுகளில் 'தேசிய உணர்வு' உருவாகி உரம் பெற்றுள்ளதற்கு இன்றியமையாதத் தேவைகளாக இருந்த, மூல வளமைகள், இந்தியத் துணைக் கண்டத்தில் அறவே இல்லையே என்பதை உலக வரலாறு கற்ற பண்டிதரும் மறந்துவிட்டார்; இல்லை மறந்து விட்டதுபோல் நடிக்கிறார். அவரைப் போன்றே இந்திய வரலாற்று ஆசிரியரான சர்தார் பணிக்கரும் நடிக்கிறார்.

உத்கல் பல்கலைக் கழகப் பட்டமளிப்பு விழாவில் விரிவுரையாற்றிய பணிக்கர் அவர்கள், மணை தூக்கும் பணியைப் புரிந்துள்ளார்.

அவர் உரையில் தேவைப்படும் கருத்தும் இருக்கிறது; தேவைப்படாத, என்றென்றும் நிறைவேற முடியாத கற்பனையும் இருக்கிறது. அவைகளைக் குறித்து நாளை எழுதுவோம்.

## வடவர் ஆதிக்கம் எதிர்பார்க்கக்கூடியதே!

### ஆங்கிலேயர் வெளியேற்றத்தின் இயற்கைப் பிரதிபலிப்பாம்!

### கண்கூடாகக் காணப்படும் நிலைமைபற்றி பண்டித நேரு

புதுடில்லி, டிச.—

"தவறான பாதையில் நாம் அடி எடுத்து வைத்தால் நமது தொல்லைகள் அதிகரிக்கும்; உணர்ச்சி, ஒரு வலிமை மிக்க எதிர்ப்பை அளிக்கவல்லது; 'அடக்கப்படுகிறோம்' என்ற அச்ச உணர்ச்சி தோன்றுமானால் அதன் எதிரொலி மிகவும் தீமை பயப்பதாக இருக்கும்."

"பொதுவாக, மொழிப் பிரச்சினையில், இந்தியாவில் இரு பிரிவுகள் உண்டு; நம் நாட்டில், 'இருதயப் பகுதி', 'கால் பகுதி' என்ற இரு பிரிவுகள் உண்டு. இந்தி பேசப்படுகிற பகுதியை ஒரு வகையில் 'இருதயப் பகுதி' என்றும், மற்ற பகுதிகளை 'கால் பகுதி' (தென் இந்தியா) என்றும் கூறலாம்."

"பிரிட்டிஷார் காலத்தில் கால் பகுதி என்று சொல்லும் பிரதேசம், 'இருதயப் பகுதி'யைக் காட்டிலும் அதிக முக்கியத்துவம் பெற்றிருந்தது; அங்கே ஆங்கிலம் ஓங்கி வளர்ந்திருந்தது; அதற்குக் காரணங்களும் உண்டு; அப்போது, நாடு, அரசியல், இலக்கியம் போன்ற துறைகளில் வழிகாட்டும் நிலைக்குக் கட்லுக்கப்பாலேயே கண்ணோட்டம் செலுத்தியது; இயற்கையாகவே, கடலோரம் உள்ள பகுதிகளில் இந்த நிலை அதிகமாகக் காணப்பட்டது."

"சுதந்திரம் கிடைத்த பிறகு (அரசியல், இலக்கியம் ஆகிய துறைகளுக்கு வழி காட்டிக் கொண்டிருந்த) வெளிநாட்டு ஆதிக்கம் தொலைந்து விட்டது. அதன் பிறகு நாடு 'இருதயப் பகுதி'யின் செல்வாக்கை உணர்வது இயற்கையே. ஆனால், 'கால் பகுதி' (தென் இந்தியா) அச்சப்படும் அளவுக்கு, அந்த செல்வாக்கு வலுவடைய வேண்டுமென்பது துரதிருஷ்டம்தான்."

"இந்த அச்சம் மொழிப் பிரச்சினையில் மட்டுமல்ல—சர்க்கார் உத்தியோகங்கள், அபிவிருத்தித் திட்டங்கள் போன்ற மற்ற துறைகளிலும் கண்கூடாகத் தெரிகிறது,"

—இவ்வாறு பண்டித நேரு, டில்லியில் நடைபெற்ற இந்தி மொழிப் பயிற்சிக் கூட்டமொன்றில் பேசுகையில் குறிப்பிட்டார்.

எல்லா மொழிகளிலிருந்தும் சொற்களைப் பெற்று கூட்டி, இந்தியை ஒரு கலப்பு மொழியாகச் செய்யும் எண்ணத்தை பண்டித நேரு பரிகசித்தார்.

"ஒரு மொழி, வளர்ச்சி அடைவதற்கு இது வழியல்ல; சொற்கள் இயற்கையாகவே அதனுள் வரவேண்டும்," என்று குறிப்பிட்டார்.

## இயலவில்லையாம்!

சென்னை மாநிலத்தில் கைத்தறி கூட்டுறவுச் சங்கங்களை நிறுவுவது பற்றி பரிசீலிக்கப்படுகிறதென்றும் திட்டம் இறுதியாக நிர்ணயமாகி இன்னும் பரிசீலனை முடியாமல் இருப்பதால் இதற்கென, மத்திய, சென்னை மாநில சர்க்கார்கள் ஒதுக்கும் நிதி, பலன் பெறும் கைத்தொழில்கள் ஆகிய விவரங்களைத் தெரிவிக்க இயலவில்லையென்று சென்னை சட்ட சபையில் சுகாதார மந்திரி கூறியுள்ளார்.





# 'இந்தி மொழியின் ஆதிக்கம் ஏற்படும்' என தென்னாட்டினர் அஞ்சுகின்றனர்

## அதற்கான காரணம் கிடையாதாம்!

### இந்தி வெறியர் ஒருவர் ஆராய்ச்சியும்—ஆறுதலும்!

"நான், மதுரை, திருச்சிராப்பள்ளி போன்ற முக்கிய நகரங்களுக்குச் சென்றிருந்தேன்; இந்தி மொழியின் தொண்டர்களுடன் விவாதம் நடத்தினேன்; இதன் மூலம், தென்னாட்டு மக்கள் அனைவருமே இந்தியை எதிர்க்கவில்லை; ஆனால், இந்தி மொழியை ஏற்றுக்கொள்வதன் மூலம், இந்தி மொழி பேசும் பகுதியினர் தங்கள்மீது ஆதிக்கம் செலுத்துவார்கள் என்ற அச்சம் தெற்கே உள்ள மக்களிடம் பரவலாக இருப்பதை நான் கண்டேன். இந்த அச்சத்திற்கு தக்க காரணம் இல்லாமல் இருக்கலாம்; ஆனால் அந்த அச்சம் இருப்பது உண்மை,"

—இவ்வாறு, இந்தி மொழிக் கவிஞரும், பாராளுமன்ற உறுப்பினருமான ஆர். எஸ். திங்கர் கூறியுள்ளார்.

புதுடில்லியில் நடைபெற்ற கலாச்சார நிகழ்ச்சி ஒன்றில் பேசுகையில் அவர் தொடர்ந்து கூறியதாவது:—

"ஆங்கிலம் நம்மிடையேயிருந்து வந்த நிலையை இந்தி அடையப் போகிறது என்ற தவறான நினைப்பில் நாம் எல்லோரும் இருக்கக் கூடாது. மாநிலங்களில், நிர்வாகத் துறையிலும், கல்வித் துறையிலும் பிரதேச மொழிகள் சிறந்த இடத்தைப் பெற்றிருக்கும் என்பதில் சந்தேகம் இருக்கமுடியாது.

"இந்தி மொழி வளர்ச்சியினால், தங்கள் பிரதேசமொழிகளுக்கு ஆபத்து என்ற கருத்து தென்னாட்டு மக்களிடையே உலவுகிறது; இந்த கருத்து தான், தெற்கே, இந்தி மொழியின் வளர்ச்சிக்கு உள்ள தொல்லையாகும்."

## மதுரை சம்பவம்

### விசாரணை முடிந்தது

மதுரை, டிச. 16—

மதுரையில் தோழர் எம். ஆர். இராதாவின் 'இராமாயண' நாடகம் கடந்த 2-ந் தேதியன்று நடைபெற்றதையொட்டி நிகழ்ந்த சம்பவங்கள் குறித்து இலாகா பூர்வமான விசாரணை செய்ய நியமிக்கப்பட்டிருந்த ரெவினியூ போர்டு அங்கத்தினர் திரு. டபள்யூ ஆர். எஸ். சத்தியநாதன், தனது விசாரணை முடிவுற்றதாகவும், கூடிய விரைவில் தான் அறிக்கை சமர்ப்பிப்பதாகவும் கூறியிருக்கிறார்.

## திரு-கொச்சியில் ம.சோ.கட்சிகரைகிறது

திருச்சூர், டிச. 14—

ம. சோ. கட்சியைச் சேர்ந்த கேசவமேனன், எம். எல். ஏ., ம. சோ. சட்டசபைக் கட்சியிலிருந்து விலகிக்கொண்டதாகக் கூறப்படுகிறது.

தம்மை ஒரு சுயேச்சை உறுப்பினராகக் கருதி சட்டசபையில் தமக்கு ஒரு தனி இடம் ஒதுக்கித் தருமாறு கேட்டுக்கொண்டு சட்டசபை சபாநாயகருக்கு அவர் கடிதம் எழுதியுள்ளாராம்.

சட்டசபை ம. சோ. கட்சியிலிருந்து இரண்டு பேர்—டி. எஸ். இராமசாமி, கேசவ மேனன் ஆகியோர் பிரிந்துவிட்டனர் எனத் தெரிகிறது.

## ஜாமீன் கோரவேண்டாம்!

நாகர்கோவில் குளச்சல் தொகுதியிலுள்ள தி. த. நா. காங்கிரஸ் எம். எல். ஏ., தோழர் டி. டானியேல் 4-ம் நெம்பர் வழக்கில் 70-வது எதிரியாகக் கைது செய்யப்பட்டு, நாகர்கோவில்-கோட்டாறு முதல் வகுப்பு மாஜிஸ்திரேட் கோர்ட்டில் நிறுத்தப்பட்டார். பின்னர் அவர் 'லாக்கப்'பிற்கு அழைத்துச் செல்லப்பட்டார்.

அட்வகேட்டுகள் ஜோஷ்வா டானியேலும், பக்ருதீன் ஆதமும் தோழர் டி. டானியேல் சார்பில் வாதாட மனு தாக்கல் செய்துள்ளனர். தமக்காக யாரும் ஜாமீன் கோர வேண்டாமென்று தோழர் டானியேல் கூறியிருப்பதாகத் தெரிகிறது.

## பஞ்சாப் சர்க்கார் உத்திரவு

பஞ்சாப் மாநில சர்க்கார் ஊழியர்கள் ஒரு முறைக்கு மேல் மறுமுறை மணம் செய்து கொள்ளக் கூடாதென சர்க்கார் ஊழியர் நடத்தை விதிகளில் திருத்தம் செய்து மாநில சர்க்கார் உத்தரவு பிறப்பித்துள்ளதாகத் தெரிகிறது.

"சர்க்கார் உத்தியோகத்திற்கு வருபவர்கள், ஒருமுறைக்கு மேல் மணந்து கொண்டவர்களாக இருக்கக்கூடாது; அப்படி இருந்தால், அதற்கான விசேட காரணங்களை அவர்கள் தெரிவிக்க வேண்டும்," எனக் கோரியிருப்பதாகத் தெரிகிறது.

## 'கிழவி'யை'குமரி'யாக்கும் அலங்கோலம்

### இந்தி மொழியை வளர்க்கும் நாடகம்!

### மக்கள் சபைத் தலைவரின் மிதமிஞ்சிய போக்கு.

### கற்றுக்கொள்ளுங்கள் என்று எச்சரிக்கிறாராம்!

புதுடில்லி, டிச. 16—

இந்தியப் பாராளுமன்றத்தில், இந்தி மொழியைப் பரப்புவதற்கு தீவிரமாக முயற்சிக்கப்படுகிறதாம். 'இந்தி தேசிய மொழி; அதைக் கற்காமலிருந்துவிட்டு, பின்னர் தொல்லையுற வேண்டாம்,' என்று மக்கள் சபைத் தலைவர் மாவ்லங்கர் அடிக்கடி அமைச்சர்களுக்கும், உறுப்பினர்களுக்கும் ஞாபகமூட்டி வருகிறாராம்.

"இந்தியில் கேட்கப்படும் கேள்விகளுக்கு இந்தியில்தான் பதில் அளிக்க வேண்டும்," என்று பிரதமர் பண்டித நேரு, அமைச்சர்கள் அனைவருக்கும் சுற்றறிக்கை அனுப்பியிருக்கிறார்.

இன்று மக்கள் சபையில், உள்நாட்டிலாகா உதவி அமைச்சர் பி. என். தாதர், இந்தியில் கேட்கப்பட்ட கேள்விகளுக்கு ஆங்கிலத்தில் பதில் அளித்துக்கொண்டிருந்தாராம்.

இதுகண்டு, பண்டித நேரு, உடனே எழுந்து, தாதரின் அருகே சென்று, அவரிடம் இரகசியமாக ஏதோ முணுமுணுத்தாராம்.

பின்னர் தாதர், தான் ஆங்கிலத்தில் பதில்களைக் கூறுவதாகவும், பின்னர், அவற்றிற்கு இந்தி மொழி பெயர்ப்பை படிப்பதாகவும் சபையோரிடம் கூறினார்.

இவருக்குப் பின், கேள்விகளுக்குப் பதில் கூறிய அமைச்சர் மாளவியா, இந்தியில் பதில் அளித்தாராம்.

**இந்தி மொழி அறியாத தென் இந்திய உறுப்பினர்கள், இப்படி தங்கள் மீது இந்தி மொழி திணிக்கப்படுவது கண்டு வேதனைப்பட்டு வெறுப்படைந்துள்ளார்களாம்.**

பாராளுமன்ற கட்டிடங்களில் உள்ள அதிகாரியின் பெயர்கள் எல்லாம், இந்தியால் எழுதப் பட்டுவிட்டனவாம்; ஆனால், பல சொற்கள் மொழி பெயர்க்கப்பட்டிருக்கும் நிலையைக் கண்டு பலர் மகிழ்வதைவிட கேலிக் கண்கொண்டே பார்க்கின்றனராம்!

'பார்லிமெண்டரி' என்ற சொல்லை அப்படியே 'பார்லிமெண்டரி' என்று இந்தியில் மொழி பெயர்த்திருக்கிறார்களாம்.

'அண்டர்-செகரட்டரி,' 'சூப்பிரண்டெண்ட்,' 'கமிட்டி', 'பிராஞ்ச்' என்ற ஆங்கில வார்த்தைகள் அனைத்தையும் அப்படியே இந்தியில் எழுதியிருக்கிறார்களாம்.

இச்சொற்களுக்குச் சமமான சொற்கள் இந்தி மொழியில் இல்லாமையும், அவைகளை உருவாக்க இயலாமையுமே இதற்குக் காரணம் என்று சொல்லப்படுகிறது.

மொழியை வளர்க்காது, இப்படி சொற்களைத் திணிக்கிறார்களே என்று பலர் வருந்துகிறார்களாம்!

## கம்ப ராமாயணத்திலிருந்து கம்யூனிஸ்டு உறுப்பினர் மேற்கோள்?

சென்னை, டிச. 16—

சென்னை சட்டசபையில் கம்யூனிஸ்டு கட்சி உறுப்பினர் ஒருவர், தனது உரைக்குச் சாதகமாக 'கம்ப இராமாயண'த்திலிருந்து ஒரு அடி எடுத்து மேற்கோள் காட்டியதாக பத்திரிகைகளில் செய்தி வெளியாகியுள்ளது.

சட்டசபையில் விவசாயிகளின் கடன் பளு குறித்துப் பேசப்பட்ட போது, "இன்றைய விவசாயிகளின், நிலை, 'கடன்பட்டார் நெஞ்சம்போல் கலங்கினான்' என்ற நிலையிலிருக்கிறது." என்று தோழர் கே. டி. ராஜு என்ற கம்யூனிஸ்டு உறுப்பினர் குறிப்பிட்டார்.

ரெவினியூ மந்திரி மாணிக்கவேலர், "இது, கம்ப இராமாயணமல்லவா?" என்று கேட்டுவிட்டு, பதிலளிக்கையில், இந்த கம்ப இராமாயண அடியைக் குறிப்பிட்டு, 'பல ஆண்டுகளுக்கு முன்பு கூட அம்மாதிரி நிலையிருந்தது,' என்று கூறினார்.

## சென்னையில் திராவிடர் திருநாள்

### போட்டி நிபந்தனைகள்

1. திருநாள் விளையாட்டுப் போட்டியில் கலந்துகொள்வோர் சென்னையிலுள்ள கழகத் தோழர்களாயிருக்கவேண்டும்.
2. ஒவ்வொரு வகையான போட்டிக்கும் தனித்தனியாக நுழைவுக் கட்டணம் செலுத்த வேண்டும்.
3. பெரியவர்கள் ஒவ்வொரு போட்டிக்கும் 0—8—0-வும். சிறுவர்கள் (12 வயதுக்குட்பட்டோர்) 0—4—0-வும் நுழைவுக் கட்டணம் செலுத்தவேண்டும்.
4. 3 வயதுக்குட்பட்ட குழந்தைகள் அழகுப் போட்டி, 6 வயதுக்குட்பட்ட சிறுவர்-சிறுமியர் சித்திரப் போட்டி, கிளைக் கழகங்களுக்கான நாடகப் போட்டி ஆகிய 3 போட்டிகளுக்கும் நுழைவுக் கட்டணம் அவசியமில்லை.
5. போட்டியில் கலந்துகொள்வோர் 31—12—54-ந் தேதிக்குள் சென்னை மாவட்ட தி. மு. கழகத்தில் பதிவு செய்துகொள்ள வேண்டும்.
6. பெரியவர்கள் கலந்துகொள்ளும் போட்டிகளில் மூன்று போட்டிகளுக்கு குறையாமல் வெற்றி பெற்று முதற் பரிசு பெறுபவருக்கு அண்ணா அவர்களின் விசேஷ பரிசு அளிக்கப்படும்.

நுழைவுக் கட்டணத்துடன் கீழ்க்கண்ட முகவரிக்கு விண்ணப்பிக்கவும்:— சென்னை மாவட்ட தி. மு. கழகம், 'அறிவகம்' சென்னை-13.

## அழகிரி படிப்பக முதலாண்டு விழா

12—12—54 காலை 10 மணிக்கு மாக்கம்பாளைய(கோவை மாவட்டம்)த்தில் நடைபெற்ற மேற்படி விழாவில் தோழர் எஸ். ஏ. இராசமாணிக்கம் தி. மு. கழகக் கொடியை ஏற்றிவைத்துச் சொற்பொழிவாற்றினார். பின்னர் தோழர் வி. இராயப்பன் சிறிது நேரம் பேசியதும், தோழர் எம். பி. சுப்பிரமணியம் அவர்கள், இந்து மத புராண ஆபாசங்கள் குறித்தும், திராவிட நாடு பிரிய வேண்டியதின் அவசியம் குறித்தும், இந்திய சர்க்காரின் ஐந்தாண்டுத் திட்டங்கள் பற்றியும், நம் நாட்டிலிருந்து எவ்வளவு வரிப்பணம் வடநாடு செல்கிறது என்பது குறித்தும் நீண்டதோர் சொற்பொழிவாற்றினார். அன்று மாலை 5 மணிக்கு தோழர் வேலு குழுவினரின் இன்னிசை நடைபெற்ற பின், 9-30 மணிக்கு மேற்படி படிப்பகக் குழுவினரால் 'பரப்பிரம்மம்' நாடகம் நடத்தப்பட்டது.

## அமெரிக்க 'நாகரீக வளர்ச்சி

### செயற்கை முறையில் பிறக்கும் குழந்தைகள் சட்டப்படி உரிமை பெற்றன அல்ல!

### நீதிபதிகளின் முரண்பட்ட தீர்ப்புகள்

சிகாகோ—

"செயற்கை முறையில், ஆணும் - பெண்ணும் கூடாமலேயே ஒரு பெண் கருத் தரிக்க இந்திரியம் தானம் செய்யும் ஆணும், சம்பந்தப்பட்ட அந்தப் பெண்ணும், கணவனும் - மனைவியுமாக இருந்தாலன்றி, மற்றப்படி செயற்கை முறை கருத் தரிப்பால் பிறக்கும் குழந்தை சட்ட விரோதமானது தான்,"

என்று, அமெரிக்க நீதிபதி கிப்ஸன் சார்மன் இங்கு ஒரு மணவிலக்கு வழக்கில் தீர்ப்பளித்திருக்கிறார்.

ஒரு பெண்ணின் சட்ட பூர்வமான கணவன் மூலமாக ஏற்படும் கர்ப்பம்தான் சட்டப்படி செல்லத் தகுந்ததாகும் என்றும், வேறு ஆண்களின் உதவியால் செயற்கை முறையில் கர்ப்பமாகி பிறக்கும் குழந்தைகள் கள்ளக் காதல் மூலமாகப் பிறந்த குழந்தைகளாகவே கருதப்படும் என்றும் நீதிபதி கிப்ஸன் கூறியிருக்கிறார்.

தீர்ப்பில், மேலும் அவர் குறிப்பிட்டுள்ளதாவது:—

"ஒரு பெண், தனது துணைவனின் சம்மதத்தைப் பெற்றோ அல்லது பெறாமலோ செயற்கை முறையில் கர்ப்பம் தரிப்பது சமூகக் கொள்கைக்கும் ஒழுக்கத்திற்கும் விரோதமானது.

"சம்பந்தப்பட்ட பெண், பிற ஆடவர்களுடன் கள்ளத்தனமாக உடல் தொடர்பு கொண்டதாகவே கருதப்பட வேண்டும்; அத்தகைய செயற்கை முறையில் பிறந்த குழந்தை சட்ட பூர்வமான திருமணத்தின் மூலமாகப் பிறந்த குழந்தையாக முடியாது; கள்ள நட்பு மூலமாகப் பிறந்த குழந்தையாகத்தான் கருதப்படும்.

"எனவே, அக்குழந்தை, மனைவியின் குழந்தையேயன்றி, கணவனின் குழந்தையல்ல; அந்தக் குழந்தை மீது கணவன் சிரத்தை காட்ட வேண்டிய அவசியமில்லை."

இந்தத் தீர்ப்பு, 37 வயதான மேரிடுர்ஸ் போஸ் என்பவர், 48 வயதுள்ள தனது கணவர் டுர்ஸ் போஸ் என்பவர் மீது தொடர்ந்த மண விலக்கு வழக்கில்தான் வழங்கப்பட்டுள்ளது.

"எந்த முறையில் குழந்தைகள் பிறந்தாலும், அவை அவற்றின் பெற்றோர்களுக்கு சட்டப்படி பிறந்ததாகவே கருதப்பட வேண்டும்"

என்று ஹோம் கிரென் என்ற நீதிபதி சமீபத்தில் தந்த தீர்ப்புக்கு இப்போது கிப்ஸன் தரும் தீர்ப்பு, நேர் எதிரிடையாக இருக்கிறது.

கிப்ஸன் தீர்ப்பின் விளைவாக, இலிஜய் நகரில் பெரும் பிரச்னை ஒன்று உருவாகியுள்ளதாம். இங்கு ஏராளமான குழந்தைகள் செயற்கை முறையில் பிறந்துள்ளனவாம். இவற்றிற்கு இந்திரிய தானம் செய்தவர்கள், பெரும்பாலும், வெளி மனிதர்களாம். அதனால்தான், 'இக்குழந்தைகளின் பரம்பரை உரிமைகள் என்னவது?' என்ற பிரச்சினை உருவாகியிருக்கிறதாம்.

சிகாகோ மருத்துவ மனையைச் சேர்ந்த பரம்பரை ஆராய்ச்சி நிபுணரான டாக்டர் டிபி என்பவருக்கு கிப்ஸனின் தீர்ப்பு கோபத்தை மூட்டியுள்ளதாம்.

அவர் இந்த வழக்கில் சாட்சியம் கூறினார்—தனது மருத்துவ மனையில் 2,500 பெண்களுக்கு செயற்கை முறையில் கர்ப்பம் உண்டு பண்ண முயற்சித்ததில், 50 பெண்களுக்கு கர்ப்பம் ஏற்பட்டதாக தனது சாட்சியத்தில் அவர் கூறியிருக்கிறார்.

## பம்பாய் தெ. இ. ஆதிதிராவிட மகாஜன சபை

12—12—54 இரவு தோழர் ஒ. த. அய்யாசாமி தலைமையில் நடைபெற்ற நிர்வாகிகள் கூட்டத்தில் அனுதாபத் தீர்மானங்கள் பல நிறைவேற்றப்பட்ட பின் சென்ற மாத வரவு—செலவு கணக்குகளும் கடிதப் போக்குவரத்துகளும் ஒப்புக் கொள்ளப்பட்டது. பின்னர், தாராவியிலுள்ள முனிசிபல் தமிழ் ஆரம்பப் பாடசாலையில் 5-வது வகுப்பையும் சேர்த்துக் கொள்ளவும், சாலைக்கில்லா, பஜார் ரோடு பகுதிகளிலுள்ள குழந்தைகளுக்கு வசதியாக கன்னடிச்சால் வட்டத்தில் ஒரு ஆரம்பப்பள்ளி நிறுவவும் பம்பாய் நகராண்மைக் கழகக்கல்வி அதிகாரியை கேட்டுக்கொண்டும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

# நாடக மசோதா ஆய்வுக் குழுவினர் அறிக்கை

## திராவிட பார்லிமெண்டரி கட்சியின் எதிர்ப்புக் குறிப்பு

சென்னை, டிச. 17—

"சர்க்காரின் கொள்கைகள், சட்டங்கள் இவைகளை மாற்றி நிவாரணம் பெற வேண்டுமென்ற நோக்கத்துடன் ஒரு சில சொற்கள், உடல் அசைவுகள் இருக்கின்றன என்ற சாதாரண காரணங்களுக்காக ஒரு நாடகம் ஆட்சேபகரமானது என்று முடிவு செய்யக்கூடாது; ஒரு நாடகம், அல்லது காட்சிகள், ஆட்சேபகரமானவை என்று தீர்மானிப்பதற்கு, அந்த நாடகத்தின் முழு தன்மையையும் சீர்தூக்கிப் பார்க்க வேண்டும்,"

—என்று, ஆய்வுக் குழுவினர், சென்னை நாடக மசோதாவுக்கு புதிய விளக்கம் ஒன்று தந்துள்ளனர்.

சென்னை சர்க்காரின் புதிய நாடக மசோதாவின் தணிக்கைக் குழு அறிக்கை இன்று சட்டசபை உறுப்பினர்களுக்குக் கொடுக்கப்பட்டது. மேலே கூறப்பட்டுள்ள விளக்கத்தையன்றி, மற்றெந்த மாறுதலையும் ஆய்வுக் குழு செய்யவில்லை என்பது குறிப்பிடத் தக்கது.

**மத உணர்ச்சிகளைப் புண்படுத்தும் நாடகங்களை ஆட்சேபகரமானதாக்கும் பகுதி அப்படியே இருக்கிறது.**

ஆய்வுக் குழு அறிக்கையில், தோழர்கள் சுயம்பிரகாசம், எ. வேலு, கே. விநாயகம் ஆகியோர் கூட்டாக எதிர்ப்பு குறிப்பு எழுதியுள்ளனர்.

இந்த மசோதா மிகவும் அவசரமாகக் கொண்டு வரப்பட்டுள்ளதென்றும், இந்த மசோதாவில் குறிப்பிடப்படும் குற்றங்கள் இந்தியன் பினல் கோடில் உள்ளனவென்றும், அவற்றைத் தடுப்பதற்கு போதுமான பிரிவுகள் இருக்கும்போது, இந்த மசோதா தேவையற்றது என்றும் மேற்கண்டவர்களின் எதிர்ப்புக் குறிப்பில் காணப்படுகிறது.

அரசியல் சட்டத்தில் உறுதியளிக்கப்பட்டுள்ளபடி பேச்சுரிமை, எழுத்துரிமையை இந்த மசோதா பறிக்கிறது என்றும், இது எந்தத் தொழிலையும் பாதிப்பதாக இருக்கிறது என்றும் அக்குறிப்பு மேலும் கூறுகிறது.

நாடகங்கள், சமூக சீர்திருத்தம் செய்வதற்கேற்ற பிரசார ஸ்தாபனம் என்றும், இந்த மசோதா அது போன்ற நாடகங்களை ஊக்குவிப்பதாக இல்லை என்றும், இந்த மசோதாவினால் நாடகத் தொழிலில் உள்ளவர்கள் ஏராளமாக பாதிக்கப்படுவார்கள் என்றும் அந்த குறிப்பில் எடுத்துச் சொல்லப்பட்டிருக்கிறது.

தோழர்கள் கலியாண சுந்தரம், நாராயணன் நம்பியார் ஆகியோர் மற்றொரு எதிர்ப்புக் குறிப்பு எழுதியுள்ளனர்.

தணிக்கைக் குழுவின் பெரும்பான்மை உறுப்பினர்களால் செய்யப்பட்டுள்ள சிபார்சுகள் அனைத்தையும் தாங்கள் எதிர்ப்பதாக மேற்கண்ட இருவரும் கூறியுள்ளனர்.

"இந்த மசோதா அழிவை ஏற்படுத்தக் கூடியது; நாடகத்தின் மூலம் சுதந்திரக் கலாச்சாரம் அபிவிருத்தி அடைவதைத் தடை செய்ய ஆட்சியினருக்கு இந்த மசோதா அளிக்கும் அதிகாரத்தின் பயங்கரத்தன்மையை தணிக்கை குழு செய்துள்ள மாற்றங்கள் சிறிதளவேனும் குறைப்பதாக இல்லை,"

என்று அக்குறிப்பு கூறுகிறது.

"இந்த மசோதாவிற்கு அவசியமான காரணம் எதும் கிடையாது; இதன் மூலம் ஆட்சியினர் கேட்கும் அதிகாரம், நாடகங்களின் மூலம் கலாச்சாரம் வளருவதைத் தடை செய்யவே முடியும். இந்த மசோதாவின் மூலம் குடிமகனின் அடிப்படை உரிமைகள் பறிக்கப்படுகின்றன. இந்த மசோதாவை சட்டசபை நிராகரிக்க வேண்டும்,"

என்று அக்குறிப்பு மேலும் கூறுகிறது.

## மக்கள் துயருக்குப் பரிகாரமா?

"மரவள்ளிக் கிழங்கின் மாவு, மரவள்ளிக் கிழங்கிலிருந்து செய்யப்படும் சவ்வரிசி இவைகளின் விலை மிகவும் குறைந்து வருவதைத் தடுக்க 10,000 டன் மரவள்ளிக் கிழங்கு மாவையும், 2,000 டன் மரவள்ளிக் கிழங்கிலிருந்து செய்யப்படுகின்ற சவ்வரிசியையும் பிற நாடுகளுக்கு ஏற்றுமதி செய்ய அனுமதிப்பது என்று சர்க்கார் முடிவு செய்துள்ளது."

இவ்வாறு, மக்கள் சபையில் உணவமைச்சர் எம். வி. கிருஷ்ணப்பா, "மரவள்ளிக் கிழங்கிலிருந்து தயாரிக்கப்படும் பொருட்களின் விலை குறைவதினால் கஷ்டப்படுகின்ற மக்கள் பரிகாரணம் உடனே சர்க்கார் நடவடிக்கை எடுக்குமா?" என்று ஒரு உறுப்பினர் கேட்டதற்குப் பதிலாகக் கூறியுள்ளார்.

## நல்ல காலம் - வரும்வரை....

"சர்க்கார் கெஜட் பதிவில்லாத ஊழியர்கட்கு (என். ஜி. ஓ.) அவர்தம் நிலை உயர்வு திட்டத்தில் ஒன்றாக அவர்கள் வேலை பார்த்து வரும் காரியாலயங்களுக்கு அருகிலேயே வீடு கட்டித்தர சர்க்கார் கவனிக்குமா?" என்று கேட்கப்பட்டபோது, அமைச்சர் இராமநாதபுரம் இராசா, "வீடு கட்டித்தர வேண்டுமென்ற கோரிக்கை பரிசீலிக்கப்பட்டது: நல்ல காலம் வரும்வரை (அதாவது இன்னும் குறைந்தது 2 ஆண்டுவரை) இவ்விஷயத்தைக் கவனிப்பதைத் தள்ளிப்போடுவதென்று முடிவு செய்யப்பட்டது" என்று பதிலிறுத்திருக்கிறார்.

மேலும் அவர், எல்லா என். ஜி. ஓ-க்களுக்கும் வீடு கட்டித் தருவதென்றால், அதற்கு ரூ. 59·12 கோடி தேவையென்றும், அது இப்போது இயலாத நிலை என்றும் தெரிவித்திருக்கிறார்.

சிறு அளவில் வீடுகள் கட்டித் தருவது ஏற்கனவே கவனிக்கப்பட்டே வருகிறது என்றும், தாதந்தர் நகரில் 70 வீடுகள் மேலும் அதிகமாகக் கட்டுவது பரிசீலனையிலிருந்து வருகிறது என்றும் குறிப்பிட்டுவிட்டு, மேலும் சிப்பந்திகளுக்கு வீடு கட்டித்தர கடன் எழுப்புவது பற்றி 'பட்ஜெட்' விவாதத்தில் தெரிவிக்கலாமெனவும் கூறினார்.

## மெண்டே பிரான்ஸ் ஆட்சிக்கு தோல்வி

பிரான்சில், மெண்டே பிரான்ஸ் தலைமையிலுள்ள அரசாங்கத்தின் இந்தோ-சீன வரவு-செலவுத் திட்டத்தின் மீது வாக்கெடுப்பு நடந்தபோது, திட்டத்திற்கு எதிராக 301 வாக்குகளும், சாதகமாக 291 வாக்குகளும் தந்து, பிரெஞ்சு தேசிய சட்டசபை அரசாங்கத்தைத் தோற்கடித்திருக்கிறதெனத் தெரிகிறது.

# ஐந்தாண்டுத் திட்ட உதவி

## சென்னைக்கு மேலும் ரூ. 8 கோடி கிடைக்கும்

சென்னை, டிச. 17—

கடந்த $2\frac{1}{2}$ ஆண்டுகளில் ஐந்தாண்டுத் திட்டத்தின் கீழ் பிரிக்கப்படாத சென்னை மாகாணத்திற்கு ரூ. 19 கோடி கிடைத்ததென்றும், 1954-55ம் ஆண்டிற்கு இன்னும் ரூ. 8 கோடி மத்திய சர்க்காரிடமிருந்து கிடைக்குமென்றும், சென்னை நிதி அமைச்சர், சட்ட சபையில் கேள்வி ஒன்றுக்கு பதிலளிக்கையில் கூறினார்.

1955—56ம் ஆண்டிற்கான தொகை இன்னும் நிச்சயிக்கப்படவில்லை என்று அவர் மேலும் கூறினார்.

வரிகளை உயர்த்துமாறு இந்திய சர்க்கார் சென்னையைக் கேட்கவில்லை என்றும், ஆனால், அபிவிருத்தி வரி விதிப்பதுபற்றி திட்டக் கமிஷனின் கோரிக்கை ஒன்று இந்திய சர்க்கார் மூலமாக தமக்குக் கிடைத்துள்ளது என்றும் நிதி அமைச்சர் மற்றொரு கேள்விக்குப் பதில் அளிக்கையில் கூறினார்.

## அவரது நம்பிக்கை!

சென்னை மாநிலம் முழுவதிலும் 22 குறுக்கெழுத்துப் போட்டிகள் நடைபெற்று வருவதாக அமைச்சர் சுப்பிரமணியம் சட்டசபையில் தெரிவித்துள்ளார்.

"குறுக்கெழுத்துப் போட்டியில் ஈடுபட்டு ஒரு குடும்பம் முழுவதுமே தற்கொலை செய்து அழிந்து போனதாக வந்திருந்த செய்திகள் சர்க்காருக்குத் தெரிந்திருக்க, அப்படிப்பட்ட போட்டிகளைத் தடை செய்ய சர்க்கார் ஏன் இன்னும் முன்வரவில்லை?" என்று கேட்கப்பட்டதற்கு, அந்தச் சம்பவத்தை ஒரு படிப்பினையாகக் கொண்டு மற்ற மக்களும் அதில் ஈடுபட மாட்டார்கள் என்று தாம் நம்புவதாகவும், ஏற்கனவே அதில் ஈடுபட்டுள்ளவர்கட்கு அச்சம்பவம் ஒரு பாடமாகவும் இருக்கிறது என்றும் அவர் கூறியிருக்கிறார்.

## சேரி அபிவிருத்தி திட்டம் பரிசீலனையிலிருக்கிறதாம்!

சென்னை சேரி அபிவிருத்தி சட்டப்படி, சேரி அபிவிருத்திக்காகத் திட்டம் வகுக்கும் விஷயம் அரசாங்க பரிசீலனையிலிருப்பதாக சென்னை சுகாதார அமைச்சர் தெரிவித்திருக்கிறார்.

# ஆச்சாரியார் தேங்காய் உடைத்த 'வ. உ. சிதம்பரம்' கப்பல்

## பம்பாய் கம்பெனிக்கு விற்கப்பட்டது

சென்னை, டிச. 17—

"'வி. ஓ. சிதம்பரம்' என்ற பெயரில் இருந்த கப்பலை தூத்துக்குடி கம்பெனியார், பம்பாயிலுள்ள கம்பெனி ஒன்றிற்கு விற்றுவிட்டனர்,"

என்று சென்னை சட்டசபையில் கேள்வி ஒன்றிற்குப் பதில் அளிக்கையில் மராமத்து இலாகா அமைச்சர் கூறினார்.

"தூத்துக்குடி கம்பெனியிடமிருந்து ரூ. 3 லட்சம் கடன் பாக்கி வரவேண்டியிருக்கிறது," என்று அவர் மேலும் கூறினார்.

ரூ. 5 லட்ச கடனை எழு ஆண்டு தவணைகளில் திருப்பித்தரவேண்டுமென்றும், 1953 ஜனவரியில் முதல் தவணை வந்ததென்றும், மார்ச் வரை வட்டியும் வந்ததென்றும், பின்னர் கப்பலை விற்ற பணம், இதர சொத்துக்கள் கிடைத்த பின்னர் இன்னும் ரூ. 3 லட்சம் பாக்கியாகத் தரவேண்டியிருக்கிறது என்றும் அமைச்சர் கூறினார்.

"கப்பலை வாங்கிய கம்பெனி, கப்பலின் பெயரை மாற்றிவிட்டதென்பது சர்க்காருக்குத் தெரியுமா," என்று கேட்டதற்கு, "அதுபற்றித் தகவல் இல்லை," என்று அமைச்சர் கூறினார்.

"ஏதாவது நிபந்தனையின் பேரில் கப்பல் விற்கப்பட்டிருந்தால், 'வி. ஓ. சிதம்பரம்' என்றே அக்கப்பலை அழைக்குமாறு சர்க்கார் கேட்குமா?" என்று கேட்கப்பட்டது.

"விற்று அதிக நாட்களாகி விட்டது; இப்போது கேட்க முடியுமெனத் தோன்றவில்லை," என்று அமைச்சர் கூறினார்.

"தேசபக்தர் ஞாபகச் சின்னமாக பெயர் வைத்தபடியால், அதே பெயரை இன்னொரு கப்பலுக்கு வைக்க சர்க்கார் நடவடிக்கை எடுக்குமா?" என்று கேட்கப்பட்டது.

"இப்போது எப்படிச் செய்வது? அப்படிப் பெயர் வைத்தால், நஷ்டம் வருமே என்ற சந்தேகம் இருக்கிறது," என்றார் அமைச்சர்.

"இந்தக் கப்பலுக்குத்தானே, ராஜகோபாலாச்சாரியார், தேங்காய் உடைத்து, கற்பூரம் எரித்து பெயர் சூட்டி ஆரம்பித்துவைத்தார்?" என்று தோழர் டி. சண்முகம் கேட்டார்.

"அதுபற்றித் தகவல் இல்லை," என்று அமைச்சர் பதில் அளித்தார்.

## மனைக்கட்டு வழங்க முடிவு

சென்னை நகரிலுள்ள நடைபாதைகளில் வசிப்பவர்களுக்கு மனைக் கட்டுகள் வழங்க, சென்னை நகர சபை திட்டம் ஒன்றைப் பரிசீலித்து வருவதாகத் தெரிகிறது. இத்திட்டத்தின்படி ரூ. $12\frac{1}{2}$ லட்சம் வீதம் 5 ஆண்டுகளுக்கு மனைக் கட்டுகள் வழங்கப் பெறுமாம்.

## அவசியமானல் கவனிக்கப்படுமாம்!

தஞ்சை மாவட்டத்தில் பண்ணையாள் பாதுகாப்புச் சட்டம் அமுலுக்கு வந்தபோது, நிலத்தின் சொந்தக்காரர்களுக்கும் வேலையாட்களுக்குமிடையே ஏற்பட்ட 5,072 வழக்குகள் விசாரிக்கப்பட்டு வந்தன என்றும், அவற்றுள் உயர் நீதிமன்றம் 101 வழக்குகளுக்குத் தடை விதித்து விட்டதென்றும், அந்தச் சட்டம் அமுலான பிறகு 22,306 வழக்குகள் தொடரப்பட்டன என்றும், அவற்றுள் 16,153 வழக்குகள் தீர்ப்புக் கூறப்பட்டுள்ளன என்றும் சட்ட சபையில் ரெவின்யூ அமைச்சர் தெரிவித்திருக்கிறார்.

இவ்வாறு பல வழக்குகள் விசாரிக்கப்படாமல் இருந்துவருவதைக் கவனித்து விரைவில் முடிவுகட்ட, அதிகமான அதிகாரிகளையும், இதரர்களையும் நியமிப்பதை சர்க்கார் கவனிக்குமா என்ற கேள்வி ஒன்றுக்கு, 'அது அவசியமென்று தெரிகிறபோது கவனிக்கப்படும்' என்று கூறினார்.

## மீண்டும் புயலா?

சென்னை, டிச. 17—

வங்கக் கடலின் தென்மேற்கிலிருந்து ஆரம்பித்த புயல் வடக்கு நோக்கி நகர்ந்து, சென்னைக்குத் தென்கிழக்கே சுமார் 400 மைல்களுக்கப்பால் நெருங்கிவிட்டதெனவும், அப்புயல் இன்னும் அதிக தீவிரமாகி வடமேற்கு நோக்கி நகரக்கூடும்என்றும்கூறப்படுகிறது

இன்னும் சுமார் 48 மணி நேரத்தில், செங்கல்பட்டு, தஞ்சாவூர், தென்னூற்காடு மாவட்டங்களில் பலத்த மழையும் காற்றும் இருக்குமெனவும், 19-ந் தேதி காலைக்குள் புயல் பலம் மிகுந்து செங்கல்பட்டு, தஞ்சை, தென்னூற்காடு, இராமநாதபுரம் மாவட்டங்களில் கனத்த மழை பெய்யுமென்றும் அறிவிக்கப்பட்டுள்ளது.

## கழகக் கூட்டங்கள்

★

**அ. வாழவந்தி**

தி. மு. கிளைக் கழக திறப்பு விழா
20—12—54 மாலை 4 மணிக்கு
திறப்பாளர், தலைவர்:
என். பி. செல்லப்பன்
கொடியேற்றுபவர், பேசுபவர்:
எஸ். நெடுமாறன்

★

**உலிபுரம்**

தி. மு. கழக முதலாவது ஆண்டு விழா
21—12—54 மாலை 6 மணிக்கு
தலைவர்: க. பெ. ராமசாமி
பேசுவோர்:
சி. என். அண்ணதுரை
கே. ஏ. மதியழகன்
அ. பொன்னம்பலனர்

★

**லெப்பைக்குடிக்காடு**

தி. மு. கழக முதலாவது ஆண்டு விழா
வானொலி நிலயத்தில்
22—12—54 மாலை 6 மணிக்கு
கொடியேற்றுபவர்:
அன்பில் தர்மலிங்கம்
தலைவர்: அ. பொன்னம்பலனர்
பேசுவோர்:
சி. என். அண்ணதுரை
கே. ஏ. மதியழகன்
எம். எஸ். மணி
டி. பி. அழகமுத்து

★

**லால்குடி**

தி. மு. கழக ஆண்டு விழா
சிவன் கோவில் முன்பு
23—12—54 மாலை 6 மணிக்கு
தலைவர்: அன்பில் தர்மலிங்கம்
பேசுவோர்:
சி. என். அண்ணதுரை
கே. ஏ. மதியழகன்
அ. பொன்னம்பலனர்
எம். எஸ். மணி

**சென்னை 30-வது வட்ட தி. மு. கழக பொது உறுப்பினர்கட்கு**

19-12-54 காலை 8 மணிக்கு, சென்னை 29-வது (சிந்தாதரிப்பேட்டை) வட்ட தி. மு. கழக மாடியில் பொது உறுப்பினர் கூட்டம் நடைபெறும். பொருள்; கழக இடம் மாற்றம்; வரவு-செலவு கணக்கு; மாவட்ட பிரதிநிதி தேர்தல்.

**சொற் பயிற்சிக் கூட்டம்**

19-12-54 காலை 10 மணிக்கு, சென்னை, முத்தியாலுப்பேட்டை, எண். 17, சாலைவிநாயகர் கோவில் தெருவிலுள்ள முத்தமிழ் மன்றத்தில், தோழர் ந. நாகரத்தினம் தலைமையில் 'நாடும்-நாடகமும்' எனும் பொருள் பற்றி தோழர்கள் பலர் பேசுவர்.

**குறள் வகுப்பு**

19-12-54 காலை 10 மணிக்கு, சென்னை, மண்ணடி, எண் 94-95, புதுத் தெரு, இராசமன்னர் பாடசாலையில் திருக்குறள் வகுப்பு நடைபெறும். தோழர் கி. முருகேசனர் பேசுவார்.

* * *

19-12-54 காலை 10 மணிக்கு, மலை விநாயகர் பாடசாலை (ஆதம் சாயபு தெரு, இராயபுரம், சென்னை) யில், குறள் நெறிக் கழகச் சார்பில் தோழர் கி. திவாகரசன் குறள் வகுப்பு நடத்துவார்.

**ஆதிதிராவிட மக்களும்— எதிர்காலமும்**

20-12-54 மாலை 5-30 மணிக்கு, சென்னை, இராயபுரம், மீனாட்சியம்மன்பேட்டை, எண் 1, ராமசாமிக்கன் தெருவிலுள்ள சென்னை ஆதிதிராவிட மகாஜன சபையில், கம்யூனிஸ்டு கட்சியைச் சேர்ந்த தோழர் வி.பி.முருகேசபா தலைமையில், 'ஆதிதிராவிட மக்களும்-எதிர்காலமும்' என்னும் பொருள் பற்றி தோழர்கள் சப்பையா, மாணிக்கவாசகம், சுந்தரராஜன், ஈ. வி. ராஜன் ஆகியோர் பேசுவர்.

## வருந்துகிறோம்

நடிப்புப் புலவர் தோழர் கே. ஆர். இராமசாமி அவர்களின் அன்னையார் கடந்த வியாழனன்று இயற்கையெய்தினர் எனும் செய்தி கேட்டு வருந்துகிறோம். தாயாரின் பிரிவால் வருந்தும் தோழர் இராமசாமிக்கும், அவரது குடும்பத்தாருக்கும் எமது ஆழ்ந்த அனுதாபத்தைத் தெரிவித்துக் கொள்கிறோம். [ஆ-ர்.]

திராவிட முன்னேற்றக் கழகத்துக்காக தோழர் இரா. நெடுஞ்செழியன், எம். ஏ., அவர்களால், அழகிரி அச்சகத்தில் அச்சிடப்பெற்று (24, சூரியநாராயண செட்டித் தெரு, இராயபுரம், சென்னை) வெளியிடப்பெறுகிறது. ஆசிரியர்: சி. என். அண்ணதுரை, எம். ஏ.,

